Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 4


# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 39 பராபவ சித்திரை 1966 ஏப்பிரல் | இதழ் 4

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர்: மு. அருணசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர்: வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.
ஆண்டுச் சந்தா ரூபா. 3 தனிப்பிரதி அணு 4

# சமாஜச் செயற்குழுக் கூட்ட அறிவிப்பு

24-4—66 ஞாயிறன்று காலை 9-30 மணிக்கு சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக் கூட்டம் நிகழும். மாதக் கணக்கு சரிபார்த்தல், சிறப்புக் கூட்டங்கள் நடத்துதல் முதலிய பல பொருள்கள் பற்றிய முடிவுகள் தீர்மானிக்கப் பெறும். உறுப்பினர்கள் யாவரும் தவருது வருமாறு கேட்டுக் கொள்ளப் பெறுகிருர்கள்,

—(செயலாளர்)

## சித்திரை மாத விசேட தினங்கள்

3 (16—4—66) திருநாவுக்கரசு நாயனர் விழா.
9 (22—4—66) சிறுத்தொண்ட நாயனர் விழா.
11 (24-4—66) மங்கையர்க்கரசியார் விழா.
13 (26—4—66) விறன்மிண்ட நாயனர் விழா.
19 (2—5—66) உமாபதி சிவாசாரியார் விழா.
20 (3—5—66) இசைஞானியார் விழா.
21 (4—5—66) திருக்குறிப்புத்தொண்ட நாயனர் விழா.

## பிற செய்திகள்

செட்டிகுளம் சிவநெறி வாரவழிபாட்டுக் கழக ஆதரவில் 10—3—66 அன்று சமயச் சொற்பொழிவுக் கூட்டம் சிறப்புற நிகழ்ந்தது. பல அன்பர்கள் பங்கு கொண்டு சைவசமயப் பெருமை பற்றி விளக்கிப் பேசினர்.

புரசைத் திருநெறிக்கழக 61ஆம் திங்கள் வழிபாடு கிருஷ்ணுங்குளம் ஸ்ரீ காசி விசுவநாதர் கோயிலில் 20-3-66 அன்று மாலையில் சிறப்புற நிகழ்ந்தது.

நம் சமாஜப் பேரன்பர் தர்மணம் செல்வராஜ முதலியார் அவர்களின் அருமைத் தாயார் திருமதி மீனுக்ஷி அம்மாள் அவர்கள் 25—2—66 அன்று காலமானர்கள். அவர்கள் ஆன்மா இறைவன் திருவருளுக்குப் பாத்திரமாய் இன்புற்றிருக்க அவனருளையே வழுத்துகின்ருேம்.

காரைக்குடி சிவபூசைச் செல்வர் சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் 23—3—66 அன்று இறைவன் திருவடிநிழலடைந்தார்கள். அவர்கள் பிரிவு கருதி வருந்தும் குடும்பத்தினருக்கு சமாஜத்தின் ஆறுதலைத் தெரிவித்துக் கொள்வதுடன் காலஞ்சென்ற பெரியாரின் ஆன்மா நன்னிலை யுற்றிருக்க இறைவனருளையே நாடி வழுத்துகின்ருேம்.

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

மலர் 39 | பராபவ சித்திரை 1966 ஏப்பிரல் | இதழ் 4

## அறுபத்துமூவர் வழிபாடு

(ஆசிரியர்)

ஹிந்து மதம் மட்டுமன்று, உலகத்தின் மற்றெல்லா மதங்களிலும் தெய்வபக்தி நிரம்பிய ஞானிகள் வழிபாடு, சமயங்கள் தோன்றிய காலம் முதல் நடந்துவருகிறது. சைவ சமயத்தில் இப்படிப்பட்ட மெய்யடியார்களை நாயன் மார் என்று சொல்கின்றோம். நாயன்மார் இன்னின்னா ரென்று, சமய ஆசிரியரான சுந்தரமூர்த்தி சுவாமிகள் அறுபது பேரைப் பெயர் சுட்டிக் கூறுகிறார். அந்த அறு பது பேரோடு அவர் தம்முடைய தந்தையையும் தாயையும் பெயர் சுட்டிக் கூறியமையால், அவ்விருவரையும் அவர் களோடு இத்திருத் தொண்டரின் தொகையைப் பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் சேர்த்து, நாயன்மார் அறுபத்து மூவர் என்று வழங்கி வருகிறோம். தனியடியார் இவ்வாறு அறுபத்துமூன்றுபேர் என்று, திருத்தொண்டத் தொகைக்கு வகையாகிய திருத்தொண்டர் திரு அந்தாதி பாடிய நம்பியாண்டார் நம்பி, அந்தாதி 87 ஆம் பாடலில் குறிப்பிடுகிறார். இக்குறிப்புகளை விரித்து, திருத்தொண் டர் புராணம் பாடிய சேக்கிழார் பெருமான், அறுபத்து மூவரையும் நாயன்மாராகக்கொண்டு புராணம் பாடியிருப் பதை நாம் அறிவோம்.

திருத்தொண்டர்களின் தொகை அறுபத்து மூன்று தான் என்ற ஒருநிலை முடிவல்ல; பின்னரும் கணக்கற்ற தொண்டர்கள் தோன்றியிருக்கிறார்கள். எடுத்துக் காட்டாக, 'நமது குலமாணிக்கம்' என்று ராஜராஜ சோழனால் புகழப் பெற்ற அவனுடைய பெரிய பாட்டியாரான செம்பியன் மாதேவியார் ஒப்பற்ற சிவபக்திச் செல்வம் உடையவர். இவ்வாறு சொல்லத்தக்கோர் மிகப்பலர். எனினும் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பெயர் சொல்லப்பட்டவர்களுக்கே சேக்கிழார் புராணம்பாடினார். ஏனையோர்பெயரை அவர் சேர்க்கவில்லை. பழமை என்ற ஒரு வரையறை கோலி அளவுபடுத்தினால், உடன் பக்திச் செல்வம் விளையவும் வளரவும் இடமாயிருக்கு மாதலால் அறுபத்துமூன்று என்ற தொகை நிலைபெற்றது.

இவ்வாறு சுந்தரமூர்த்தியால் பாடப்பட்டவர்களுக்குக் கோயில்கள் தோறும் சிலையுருவங்கள் அமைக்கப் பெற்று, வழிபாடும் விழாக்களும் நடைபெற்று வந்திருக்கின்றன. சைவமக்கள் தங்கள் இல்லங்களிலும் இவ்வகை விழாக்களையும் அறுபத்து மூன்று அடியார்களுக்குக் குரு பூஜைகளையும் நடத்தி வருகிறார்கள்.

இந்த அறுபத்து மூவர் வழிபாடு, கன்னட நாட்டில் வீரசைவ சமயத்தில் இன்னும் சிறப்பாகவே இன்றும் நடைபெற்று வருகிறது. சமீபத்தில் கும்பகோணம் பெரிய மடம் ஸ்ரீ வீரசிம்மாசன பீடாதிபதி ஸ்ரீ சாந்த தேவ சாரங்கதேசிக சுவாமிகளைச் சந்தித்து உரையாடிக்கொண்டிருந்தபோது அவர்கள் பல செய்திகளைத் தெரிவித்தனர். சுவாமி கன்னட மொழியினர். அவர்கள் தெரிவித்த சில செய்திகளைத் தமிழ்மக்கள் அறியும் பொருட்டு இங்குக் குறிப்பிடுகின்றோம்.

கன்னட நாடெங்கும் அறுபத்து மூவர் பூஜை மிக்க சிறப்போடு நடைபெறும். அறுபத்துமூவர் சரித்திரம் கன்னடத்தில் பழமையாகவே பாடப்பட்டுள்ளது. அது ஒரு சிறந்த காவியம். இவர்கள் அறுபத்துமூவர் புராதனர் என்று சொல்லப் பெறுவர். இப்புராதனர் சரித்திரம்

கன்னட தேசத்து எல்லா நூல்களிலும் காணப்படும். அந்நாட்டில் ஒவ்வொரு கிராமத்திலும் நாலைந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை, ஒரு வீரசைவ பீடாதிபதியை அழைத்துவந்து சிறப்புச் செய்வர். அவரை தினம் ஒரு நாயனாராகப் பாவித்து, அறுபத்து மூன்று நாள் அறுபத்து மூன்று சீடர் தினம் ஒருவராகப் பூசைசெய்வர். பூசைக்குச் சிற்றூரில் கூட, ஆயிரக் கணக்கான மக்கள் கூடுவார்கள். பூசைச் செலவையும், கூடுகின்ற பக்தகோடிகளின் உணவுச் செலவையும், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சீடர் ஏற்றுக் கொள்கின்றார்.

மைசூர் இராஜ்யத்தில் தும்கூர் ஜில்லாவில் குத்பி என்ற ஊரில் சென்ன பசவேசர் கோயில் உண்டு. அங்கு ஓர் அழகான குளம். குளத்தைச் சுற்றிப் பழமையான கட்டிடம் உண்டு. இதில் அறுபத்து மூன்று அறைகள் உண்டு. இங்குச் சமீபகாலத்தில் அறுபத்து மூன்று லிங்கப் பிரதிஷ்டை நடைபெற்றிருக்கிறது. இங்கு மடாதிபதியை அழைத்து வந்து, முறையே ஒவ்வொரு நாயனாராகப் பாவித்து, அறுபத்து மூன்று குருபூசை நடத்த, லட்சக் கணக்கான ரூபா செலவாகும். கோயிலை ஒட்டி இவ்வழிபாடுகள் நடைபெறுகின்றனவாம்.

பெல்காம் ஜில்லாவில் அத்தாணி என்ற ஊரில் முருக ராஜேந்திர சிவயோகி என்ற ஒரு மகான் இருந்தார். அவர் 1921-இல் சமாதி அடைந்தார். அவர் இங்கு மடத்தின் தலைவராக அமர்ந்திருந்த சமயத்தில், மாணுக்கருக்கான ஒரு விடுதி அமைத்து, அதில், கல்லூரி மாணுக்கர் 600 பேருக்கு உண்டியும் உறைவிடமும் தரத்திட்டம் செய்திருந்தார். அவ்விடுதியில் அறுபத்து மூவருக்கும் அறுபத்து மூன்று அறைகள் நாற்புறமும் சூழ்ந்திருக்கும்படி கட்டப்பட்டன. சிவயோகியார் சமாதி அமைந்த பின், மத்தியில் அவருக்கு ஒரு சிலை அமைத்திருக்கிறார்கள்.

கிருஷ்ணா நதியும் கடப்பிரபாநதியும் கூடுகின்ற இடத்தில், கூடல சங்கமம் என்ற ஊர் அமைந்திருக்கிறது. நதிகளின் இக்கூடல் மிக்க விசாலமானது, ஒன்றரை மைல்

அகலம். இவ்வூரில் மிகப் பழமையாக அறுபத்து மூவர் மண்டபம் உள்ளது. முன் சொன்னபடி, இங்கு மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்கொரு முறை ஒரு மடாதிபதியை அழைத்து வந்து, அறுபத்து மூவர் பூசை இன்றும் நடைபெறுகிறது.

இவ்வறுபத்து மூவராவார் தமிழ்நாட்டில் சைவமக்கள் வழிபடுகின்ற அறுபத்து மூன்று நாயன்மாரே.

அறுபத்து மூன்று என்ற எண் வீர சைவமக்கள் வாழ்க்கையில் பலதுறையிலும் இடம் பெற்றிருக்கிறது. வீர சைவ ஆசாரங்கள் 63. வீர சைவர் என்போர் லிங்க தாரணம் செய்வோர். லிங்கப் பெட்டகத்தை மார்பில் கோத்துக் கட்டுகின்ற கயிறு அறுபத்து மூன்று இழைகளைக் கொண்டதாய் இருக்கும். இந்தக் கயிற்றை அவரவரே ஆசாரமாக இருந்து நூற்றுத் திரிக்க வேண்டும். இதுபற்றி மகாத்மா காந்தி கூறிய ஒரு சொல் மிகவும் சிறப்புடையது.

அகில இந்திய காங்கிரஸ் பெல்காம் நகரத்தில் ஒரு முறை கூடியது. அச்சமயம் அங்கு வீரசைவ சமிதியும் கூடியது. வரவேற்புக் குழுவினர், சமிதியைத் திறந்து வைத்து உரை நிகழ்த்தும்படி காந்தியடிகளை வேண்டினர். அவரும் அதற்கிசைந்து அவ்வாறே திறப்பு விழாச்செய்து, உரை நிகழ்த்தினர். அப்போது சொன்னர்; நூல் நூற்க வேண்டும் என்று நான் பிரசாரம் செய்யும்போது, சிலர் குறைபட்டுக் கொள்கிருர்கள். அவரவர் தங்கள் ஆசாரத்தைக் கடைப்பிடித்து ஒழுகினுல் நூற்றலைப் பற்றி நான் பேசவேண்டியிருக்காது, நீங்களே நூல் நூற்றுக் கயிறு திரித்து உபயோகப்படுத்திக் கொண்டு வந்தால், நூலுக்கும் பஞ்சமிராது. பல்லோரும் நூல் நூற்பது என்ற தங்கள் ஆசாரத்தைக் கடைப்பிடித்து ஒழுகினுல், எனக்கு இந்த பிரசார வேலையே இல்லையல்லவா?''

# திருக்களாஞ்சேரி

(மு. அ.)

சைவ சமய சந்தான குரவருள் மூன்ருவது குரவ ராகிய மறைஞான சம்பந்தர் உமாபதி சிவாசாரியாருக்கு உபதேசம் செய்திருந்து திருக்களாஞ்சேரி என்ற இடத்தில் முத்தியடைந்தார் என்பது வரலாறு. இத்திருக்களாஞ் சேரி எங்கு இருக்கிறது என்பது சைவர் பெரும்பான்மை யோருக்குத் தெரியாது. ஆதலால் இதுபற்றி ஒரு குறிப்புக் கூறுவது பொருத்தமாகும்.

திருக்களாஞ்சேரி என்பது சிதம்பரம் தலத்துக்கும் நடராஜப் பெருமான் ஆலயத்துக்கும் நேர் ஈசானிய திசை யில் நகருக்கு வெளியே அரைமைல் தூரத்தில் அமைந் துள்ள ஒரு திடலாகும். கப்பிச்சாலையை விட்டு ஒருபர்லாங் தூரம் மண்பாதையில் நடந்துசெல்லவேண்டியிருக்கும். அங்கு இப்போது சில புளியமரங்களும் சில குடிசை வீடு களும் மட்டுமே இருக்கின்றன. இவ்விடம் ஒருகாலத்தில் சிறப்பான சோலையாக இருந்து சிங்காரத் தோப்பு என்று பெயர் பெற்றிருந்தது. அங்கு மறை ஞானசம்பந்தர் தாம் திருமடம் கட்டிக்கொண்டு அதில் வாழ்ந்தார் என்று தெரிகிறது.

அவர் காலத்தில் தில்லைநகரமானது கீழ்ப்புறத்திலும் தென்புறத்திலும்பரவவில்லை. மேற்புறத்திலும் வடபுறத் திலும் பரவியிருந்தது. ஆகவே நகரத்துச் சைவமக்கள் வடமேற்கு மூலையிலிருந்த மறைஞான சம்பந்தர் மடத்துக் குச் சென்று, அங்கு மறைஞான சம்பந்தருக்குப் பணி விடை செய்து உபதேசம்பெற்று வாழ்ந்தார்கள் என்று யூகிக்க இடமுண்டு. மடத்திலிருந்து பார்த்தால் தில்லைக் கோபுரங்கள் நான்கும் இன்றுகூட, எதிரேதெரியும்.

ஆனல், காலக்கிரமத்தில் மடம் இடிந்து விட்டது. மடம் என்பது நடுவில் விசாலமானமுற்றமும் நாற்புற மும், தாழ்வாரமும் கூடிய ஒரு சிறு கட்டிடம். இதன் அடிப்படையும் குறடும் தூண்களும் கூரையும் வாயில்களும் கருங்கல்லால் ஆனவை. வடபுறம் ஒருதனி

அறைஉள்ளது. அதன் கீழ்ப்புறத்தில் மற்ரேர் அறையும் உள்ளது. இவ்விரண்டு இடங்களும் மறைஞான சம்பந்தர் தியானத்தில் அமர்ந்திருந்த இடங்கள் போலும். மேலும் தாழ்வாரங்களில் அடியவர்கள் உறைந்து உணவு கொண்டு உபதேசம் பெற்று வாழ்ந்தார்கள் என நினைக்க இடமுண்டு. பக்கத்தில் குடிசையிலுள்ளவர்கள் இங்கு இப்போது மாடு கட்டி, மாட்டுக் கொட்டில்களாக இம் மடத்தை உபயோகிக்கிருர்கள். கூறையின்மீது ஆலும் அரசும் நுணுவும் வானோங்கி வளர்ந்து கட்டிடத்தையே இடித்து விட்டன. எதற்கும் பயன்படாதவாறு கட்டிடம் அழிந்துபோயிருக்கிறது இம்மடத்தின் வாயில் தென்புறம் வாயிலின்மேல் அறுகால்கல்லில் கஜலக்ஷ்மி வடிவம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

இந்தக் கட்டிடத்திற்கு மேல்புறத்தில் சில புளிய மரங்களே இப்போது உள்ளன. இந்த மடத்துக்கு வடபால் மறைஞான சம்பந்தர் சமாதியும் அதன் கீழ்ப்புறத்தில் ஒரு விநாயகர் கோயிலும், கோயிலுக்கு வடபால் ஒரு குளமும் இருக்கின்றன. இக்குளமே சிதம்பரத்துக்குரிய பத்துத் தீர்த்தங்களில் ஒன்ருகிய பிரமதீர்த்தம் என்பது. இதன் கரையில் அமர்ந்துள்ள விநாயகர் பொல்லாப் பிள்ளையார் போன்ற தோற்றமுடையவர்; இவருடைய திருமேனியில் அதிகம் உளிபடவில்லை; இவர் வலம்புரி விநாயகர்.

இவ்விநாயகர் கோயிலுக்கு மேல்புறத்தில் அமைந்துள்ளது மறைஞான சம்பந்தர் சமாதி. இது சிறிய கட்டிடம். ஒரு பீடத்தின் மீது திருவடிகள் மட்டுமே உள்ளன. சுற்றிலும் பிரகாரம் விட்டுத் திருவாவடுதுறை ஆதினத்தார் ஒரு மதில்சுவர் எடுத்திருக்கிருர்கள். சமாதி உள்மாடத்தில் ஒருசிறு விநாயகர் உள்ளார். சமாதிக்கு ஒரு சைவர் தினமும் வந்து பூஜை செய்து வருகிருர்.

சமாதியின் பின்புறத்தில் சிறிதுதூரம் விட்டுத் தென்மேற்குத் திசையில் உள்ளது, திருக்களாஞ்சேரி மகாதேவர் கோயில். இது சாசனங்களில் திருக்களாஞ்

செடியுடைய மகாதேவர் கோயில்'' என்று சொல்லப் படுகிறது. இது நடுத்தரமான கோயில்; ஒரு காலத்தில் இது மிக்க நல்ல நிலையில் இருந்தது என்று அறிகிறோம். சிறப்பான பழங்கோயிலாக இருந்த காரணத்தினாலே மறைஞான சம்பந்தர் இதன் அருகில் மடம் கட்டிக் கொண்டு தங்கினார் என்று நாம் யூகிக்கலாம். இவ்விடம் நகரைவிட்டு விலகியும், ஆனால் கோபுர தரிசனம் செய்யக் கூடிய நெருங்கிய இடத்திலும் அமைந்துள்ளது.

கோயில் வாயில் இருப்புக்கம்பி போடப்பட்டுள்ளது. மதிற்சுவர்கள் விசாலமான பிராகாரமும் விட்டுச் சமீபத்தில் புதிதாகச் செப்பனிடப் பட்டுள்ளன: ஆனால் கோயிலின் முக்கிய பாகங்களான சுவாமிகோயிலும் அம்பாள் கோயிலும் இடிந்துபோயின. இரண்டிலும் கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகிய மூன்றும் கருங்கல்லால் கட்டப்பட்டவை; கர்ப்பக்கிரகம் மட்டும் இடியாமல் இருக்கிறது. மேல் விமானங்களில் அதிகமான மரங்கள் முளைத்து விமானங்கள் பழுதடைந்து போயிருக்கின்றன; எனினும் இடியவில்லை. ஆனால் அர்த்த மண்டபமும் மகாமண்டபமும் இடிந்தே போயின. எங்கும் பாம்புப்புற்று மிகுதி; உள்ளே புகமுடியாத நிலையில் உள்ளது. பூஜை முதலியன பல ஆண்டுகளுக்கு முன்பே நின்றுபோயின என்று தெரிகிறது. சுவாமி, பிரமபுரீசர், மூலலிங்கமும் ஆவுடையாளும் நல்ல நிலையில் கர்ப்பக்கிரகத்துள் உள்ளன; அருகில் செல்ல யாரும் அஞ்சுவர்; வெளியே எடுக்கவில்லை. கோயிலினுள் நுழையும் வாயிலில் இருபுறமும் கல்துவாரபாலகர், சிறிய வடிவங்கள், இரண்டே கைகள் உடையன; துஷ்டர்களால் பின்னமாகியுள்ளன.

முன்மண்டபத்தில் விநாயகர், நந்தி பைரவர், வள்ளி, தெய்வயானை, சிறியதனிஅம்பிகை, பிரமன் ஆகிய வடிவங்கள் காணப்படுகின்றன. முருகப்பெருமான் வடிவம் காணப்படவில்லை; களவாடப்பட்டதுபோலும். உள் வாயிலில் சுவரின் புடைப்புச்சிற்பமாக இடப்புறம் விநாயகரும், வலப்புறம் கலியாணசுந்தரமூர்த்தியும் காணப்

படுகிறார்கள். எதிரில் ஒருநந்தியும் மற்றொரு லிங்கத்தின் பாணமும் மட்டும் உள்ளன. பிராகாரத்தில் உடைந்த தக்ஷிணாமூர்த்திகளோடு, அமர்ந்த கோலத்தில் அம்பிகையின் வடிவம் ஒன்று உடைந்துபோய் இடுப்புக்குக்கீழ் உள்ள பாகம் மட்டும் நல்ல சிற்பமாகக் காணப்படுகிறது.

முன்வாயில் கடந்து உள்ளே நுழைந்தவுடன் இடப்புறம் மடைப்பள்ளி; பழுதுபார்க்கப்பட்டு நல்ல நிலையிலுள்ளது. அதன் மேல்புறம் மதில்சுவரையொட்டி மிகச் சிறிய தனிக்கோயில் ஒன்று உள்ளது. அதனுள் பெரிய அம்பிகை, அமர்ந்த கோலத்தில் காணப்படுகிறார்; வடக்கு நோக்கி, இரண்டே கைகள், இடது கைகீழ் நோக்கியும் வலது கையில் மழுப்போன்ற ஆயுதம் ஒன்றும் உள்ளன.

வாயிலின் வலப்புறத்தில் வழக்கம்போல் அம்பாள் கோயில் தெற்கு நோக்கி உள்ளது. இதன் முன் மண்டபங்கள் இடிந்து விழுகின்றன. அம்பிகையை அம்பிகை கோயில் வாயிலில் எடுத்து வைத்திருக்கிறார்கள். இடிந்து விழுமோ அரவு தீண்டுமோ என்று அச்சம்; உள்ளே போகமுடியாத நிலை, அழகான சிறிய திருவுரு; அருகில் கஜலக்ஷ்மியும் உள்ளது. வெளியே கல்லாலான மயில் உருவமும் பின்னமான சூரியனும் தனியே கிடக்கின்றன. பக்கத்தில் பூரணமான வடிவமுடைய ஒரு தக்ஷிணாமூர்த்தியுள்ளார். இந்தத் தக்ஷிணாமூர்த்தியன்றி, வேறுபல தக்ஷிணாமூர்த்தி வடிவங்கள் பிராகாரங்களிலும் பிற இடங்களிலும் உடைந்தும் பின்னமாயும் காணப்படுகின்றன. ஒருவேளை இங்கு யாரேனும் சிற்பி வசித்திருந்து, தக்ஷிணாமூர்த்தி வடிவங்கள் செய்து கொண்டிருந்தார் போலும்.

சுவாமி கோயிலின் பின்புறம் நிருதி விநாயகர் கற்கோயில். அடுத்து சுப்பிரமணியர், கஜலக்ஷ்மி, வடபுறம் சண்டேசர் ஆகிய கோவில்கள் யாவும் மிகவும் நல்ல நிலையிலும் சுத்தமாகவும் உள்ளன; பழுது இல்லை. ஆனால் இங்கு இருந்த மூர்த்திகள் அனைவரும் கோயில் பராமரிப்பின்றிக் கெட்டுப்போன காலத்தில், சுவாமி கோயிலின் மண்டபத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து வைக்கப்பட்டு உள்ளனர், ஆனால் அந்த முன் மண்டபமோ இடிந்து விழுந்து கொண்டிருக்கிறது.

தென் கோட்டத்தில் நர்த்தனகணபதி. அடுத்து, ஒரு கல்லில் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் வடிவங்களும் புடைப்புச் சிற்பமாக அமைக்கப்பட்டிருப்பது மிகவும் புதுமையாக உள்ளது; சம்பந்தர் வடிவம் பின்னமானது. அடுத்து ஒருகல்லில் சிவபெருமானைப் பதஞ்சலி வியாக்கிரபாதரும் பூதேவி சீதேவியோடு கூடிய திருமாலும் வழிபடுவதாக உள்ள ஒரு புடைப்புச்சிற்பம் ஒரே கல்லில் அமைந்துள்ளது. அடுத்த கோட்டத்தில் தக்ஷிணாமூர்த்தி தனிக்கோயில்; பெரியவடிவம்; நன்ருக உள்ளது.

நிருதி விநாயகர் கோயில் முழுமையும் கருங்கல்லால் ஆனது. பின்புறம் இடிந்து கொண்டு வருகிறது. முன்புறம் ஒற்றைக்கால் மண்டபம். இது. நடராஜா கோயில் சிவகங்கையின் வடபால் அமைந்துள்ள ஒற்றைக்கால் மண்டபம்போலவே இருக்கிறது. இந்த ஒற்றைக்காலும் நடராஜா கோயில் நிருத்த சபையில் காணப்படும் வேலைப்பாடு மிகுந்த தூண்களைப்போன்ற ஒருதூண். இது கொண்டு இக்கோயில் மிகவும் பழமையான கோயில் என்று கருதத்தோன்றுகிறது. பின்புறம் கோட்டத்தில் மிகப் பெரிய லிங்கோத்பவர்; வடபுறம் கோட்டத்தில் பிரமன் பெரிய வடிவம், நல்லவேலைப்பாடு.

லக்ஷ்மி கோயிலின் கதவு மட்டும் கீழே விழுந்து கிடக்கிறது. உறுதியான பெரிய கதவு, மிகப்பலவான ஆண்டுகள் வெயிலிலும் மழையிலும் கிடந்தும் சிறிதும் பழுதுருமல் இருப்பது கதவு செய்த மரம் எவ்வளவு சிறப்பானது என்பதை உணர்த்துகிறது.

வடபுறம் அடுத்த கோட்டத்தில் அழகான விஷ்ணு துர்க்கை; மிகவும் சாந்தமான முகபாவம், கருவறையைச் சூழ்ந்து ஒருகுறடு தரைமட்டம் வரையில் காணப்படுகிறது. ஒருகால் கோட்டமூர்த்திகளுக்குப் பாதுகாப்பாக இதன் மீது ஒரு சுற்றுமண்டபம் இருந்து கிலமாகிவிட்டது போலும்.

கோயிலினுடைய கட்டிட அமைப்பு, சிற்பம், மூர்த்திகள் முதலியன கவனிக்கும்போது, இது சிறப்புமிக்க ஒரு

சோழர் கோயிலாக இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது. தில்லை நகரில் நடராஜப்பெருமான் கோயில் அன்றியும், புலீச்சுரமுடையார், அனந்தீச்சுர முடையார் போன்ற பல தனிக் கோயில்கள் உள்ளன. அவை போலவே இதுவும் ஒன்றுயிருந்திருக்கும். முகம்மதியர் படையெடுப்பின் விளைவாய் நகரமே வடமேற்குப் பகுதிகளை விட்டுத் தென்கீழ்ப்பக்கம் நகர்ந்த காலத்தில் இக்கோயில், வழிபாடு குன்றிப் பராமரிப்பு இழந்து விட்டது போலும்.

கல்வெட்டுக்கள் தென்புறம் வடபுறம் அடிவரிகள் முதலியவற்றில் மிக அதிகமாகக் காணப்படுகின்றன. மிகப் பழைய சோழர் காலக் கோயிலாகிய இதனைப் புதுப்பித்து இங்கு மீண்டும் வழிபாட்டை ஏற்படுத்துவது சைவ மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் அறநிலைய இலாகாவிற்கும் தொல் பொருள் இலாகாவிற்கும் உரிய கடமையாகும்.



# நீறுநிறைந்த நித்திய வழிபாடு

வித்துவான் கோ. மு. முத்துசாமிபிள்ளை I. A. S. (ஓய்வு)

"பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயான் மறைபோலுங் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானுன் சாழலோ"
—திருவாசகம்.

"பூசுவதும் வெண்ணீறு" என்பதால் சிவபெருமான் வெண்மை நிறமான திருநீற்றைத் தமது மேனியில் பூசிக் கொண்டுள்ளார் எனக் கொள்ளவேண்டும். இதையே, "நீறேறு திருமேனியுடையான் கண்டாய்" என அப்பர் அடிகளும் தமது திருத்தாண்டகத்தில் குறிப்பிடுகின்றார். இத்திருநீறு எப்போது சிவபெருமான் திருமேனியை அடைந்ததென்பதைக் காண்போம் :

சர்வ சங்காரகாலமென்னும் பேரூழிக்காலத்தில் எல்லாமே அழிந்து விடும். அப்போது தனித்து நிற்பவர் சிவபெருமான் ஒருவரே; எல்லாவற்றையும் சுட்டெரித்து தம்முள் அவற்றை ஒடுக்கம் செய்துகொள்வார். அவ்வகையில் ஏற்பட்ட பொடியாகிய நீற்றைத் தம்மீது பூசிக்கொள்வார். இவ்வுண்மையைத் திருஞானசம்பந்தர் ''காடுடைய சுடலைப் பொடி பூசி'' எனச் சுட்டிக் காட்டுகிறார். எல்லா உயிர்களின் வினைகளும் அகலவேண்டும் என்பதற்காக இவ்வாறு நீறு அணிகிறார் சிவபெருமான். இவ்வுண்மையை, "தொழுது எழுவார் வினைவளம் நீறெழ நீறு அணி அம்பலவன்'' என மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் விளக்குகிறார். சர்வசங்கார காலமே படைப்புக்கு முன் நிகழ்வதால், இதுசமயம் சிவபெருமான் பூசிக்கொண்ட விபூதி "ஆதி விபூதி" எனப் பெயர் பெறுகின்றது.

இத்தகைய ''ஆதிபூதியை'' அவர் தரித்துக்கொள்ளு முன்னும் அவர் திருமேனியில் திருநீறு இருந்திருக்கிறது, அதுவே "அனாதி விபூதி." அவரது திருமேனியில் தானே பூத்த நீறு அதுவே யாகும். சிவபெருமான் ''எரிபோல் மேனிப் பிரான்": அவர் "பொன்னார் மேனியன்'' சுவாலை விட்டெரியும் நெருப்பின்மீது நீறுபூக்கும். இது போன்றே அவரது தூயமேனிமீதும் நீறுபூத்தது. சம்பந்தர் கூறுவது போன்று அவர் 'தூயவன்'' ''தூய வெண்ணீறு மேனி மேல் பாயவன்'' இதன் உண்மையை விளக்கமாக எடுத்துக்காட்டுகிறார் சிதம்பர சுவாமிகள்.

> ''ஆதி பகவன் ஞான வழலிற் பூத்து நித்தியமாய்
> அணிந்தோர் தமக்கு வசிகரமாய் அருந்தி னோர்கட்
> காரமுதாய்''

அமைகிறது அவரது ஞான அழலில் பூத்த விபூதி.

சிவபெருமானுக்கு உரிய குணங்கள் எட்டு. ''எண்குணத்தான்'' எனத்திருக்குறளாசிரியர் குறிப்பிடுவதிலிருந்தும் இதனைத் தெரிந்துகொள்ளலாம். இக்குணங்களில்

ஒன்று "தூய உடம்பினன் ஆதல்"; அதாவது தூய்மையான உடம்பை அவர் கொண்டிருத்தல். அவருக்குப் "பேரருளுடைமை" என்னும் குணமும் மற்றொன்று. உயிர்களிடத்துப் பேரருள் சுரப்பதற்காக, தமது அருளைத் திருநீறு மயமாகத் தமது உடலிலிருந்து வெளிப்படுத்துகிறார். இத்தகைய அநாதி விபூதியுடன், முன் சொன்ன ஆதி விபூதியும் சேர்கிறது. அநாதி விபூதி அவரது படைப்புத் தொழிலைக் குறிக்கும். ஆதிவிபூதி "அழித்தலை"க் குறிக்கிறது. படைத்தலும் அழித்தலும் அருள் வழங்குவதற்காகவே யாகும். இதற்காக நமக்கு ஆனினங்களிலிருந்து வீபூதி கிடைக்குமாறு சிவபெருமான் அருள் புரிகிறார்.

சிவபெருமானுக்கும் ஆனினங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. இதைச் சேக்கிழார் எடுத்துக்காட்டுகிறார். இடபம் சிவபெருமானுக்கு என்றுமே பணி செய்வது. தருமதேவதையே இடபமாகச் சிவபெருமானைத் தாங்கி நிற்கிறது எனக் கந்தபுராணம் கூறுகிறது. இத்தகைய இடபதேவரின் வழிவந்தவை பசுக் கூட்டங்கள். (ஆனினங்கள்.)

"உள்ளுந் தகைமையை இனிப்பிறவே றுளவே.
உமைமான் மறிக்கன்று
துள்ளும் கரத்தர் அணிபணியின் சுடர்சூழ்
மணிகள் சுரநதிநீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கள்அம் பிராட்டி
யுடனே சேரமிசைக்
கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன்
றேஇச் சுரபிகுலம்!"

எனப் பசுக்களின் பெருமையை எடுத்துரைக்கிறார் சேக்கிழார்.

இத்தகைய பசுக்களின் கோமயம் (சாணம்) மந்திரங்களின் மூலம் சிவாக்கினியால் தகிக்கப்பட்டபின் நமக்குத் திருநீறாகக் கிடைக்கிறது. இடபதேவர் வழிவந்த பசுக்கள் எவ்வாறு பூவுலகினின் வந்தன என இனிப் பார்ப்

போம். இடபதேவர் திருக்கயிலையில் சிவ சந்நிதானத்தில் இருந்த காலத்து, அத்தேவருடன் வாழ்ந்த பசுக்கள் ஐந்து. அவையாவன: சிவப்பு நிறமுள்ள சுமுனை; வெண்ணிற மான சுரபி; கபில நிறமுள்ள நந்தை; புகை நிறமுள்ள சுசீலை; கருநிறமுள்ள சுபத்திரை. பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பஞ்சகவ்வியம் அளிப்பதன் மூலம் உலகத்தினருக்கு உதவும் வகையில் அப்பசுக்களை உலகிற்கு அனுப்பினர் சிவபெருமான். அப்பசுக்களும் அவ்வாறே பாற்கடலிலிருந்து உதித்தன. இத்தகைய அப் பசுக்களின் வழிவழி வந்தவையே இப்போதுமுள்ள பசுக் கள். ஆதலின் பசுக்களுக்குத் தெய்வத் தன்மை தனிப் பட்டவகையில் உள்ளது. பல உயிர்களும் பிறந்தவுடன், பசுக்களின் பாலமுதம் பெறுகின்றன. இடைநிலை வாழ்க் கையிலும் பாலமுதம் பல பேர்கள் பெறுகிறார்கள். இறக் கும் சமயத்திலும் பாலமுதம் வார்க்கப்படுவது கண்கூடு. இத்தகைய பேருபகாரம் செய்யும் பசுக்கள் நாம் திருநீறு பெறுவதற்கும் உதவுகின்றன. பசுக்களின் சாணம்(மலம்) மந்திரபூர்வமாக உலர்த்தப்பட்டு நெருப்பிடப்பட்ட பின் தூய திருநீறாகிறது. உயிர்களின் (ஆணவம் கன்மம் மாயை என்னும்) மும்மலங்களும், மலத்தன்மை நீக்கப் பெற்ற விபூதிதரித்து ஞான ஆசிரியரது உபதேசமாகிய ஞான நெருப்பினால் வலி இழக்கும். அப்போது சிவத் தன்மை உயிர்கள் மீது பதியும் என்பது விபூதி தத்துவத் தில் உள்ளது.

"இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்
நின்ற மலமனைத்தும் நீக்குவதிங்—கென்றால்
உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்
உருவருள வல்லான் உரை" எனும் திருக்களிற்றுப்

படியார்ச் செய்யுட் கருத்தினையும் காண்க:

இத்தகைய விபூதி கற்பகம் எனப்படும். இவ்வாறு கிடைக்கத் தகும் விபூதி எல்லாராலும் விரும்பப்படுவது. ஆனால் சிற்சில இடங்களில் இத்தகைய விபூதி கிடைக்காத நிலையும் ஏற்படலாம். காடுகளில் இயற்கையாக நெருப்பு தோன்றக்கூடும். இவ்வகையில் காடுகள் அழிவதுண்டு.

இவ்வாறு ஏற்படும் பொடியை பஞ்சகவ்வியம் சேர்த்து மந்திரம் கூறிச் செய்யப்படும் விபூதி உபகற்பம் எனப் படும். மந்திரமின்றிச் செய்யப்படும் விபூதி அகற்பம். சிற்சில நதிகளின் கரைகளிலும் மலைகளிலும் உள்ள மண்ணே விபூதி மயமாக விளையும். திருநீற்று மலை என்ப தான மலை இப்போதும் உள்ளது. காடுகள் வெந்ததன் விளைவாகக் கிடைக்கும் விபூதி முன் சொன்ன ஆதி விபூதியை நினைவுபடுத்துகிறது. தானே விளையும் விபூதி அனாதி விபூதியை நினைவுபடுத்தக் கூடும்.

திருநீற்றின் பெருமையை விரிந்த வகையில் விளக்கு கிறது திருஞானசம்பந்தர் அருளிய திருநீற்றுப் பதிகம். அது ஓதத்தக்கது. நம்மிடம் வந்தணுகும் தீவினையனைத் தையும் நீறுபோல் பொடியாக்கி விடுவதால், ''நீறு'' என வும், ஒப்பற்ற முக்திச் செல்வத்தை அளிப்பதால் (வி=மேலான, பூதி=செல்வம்) விபூதி எனவும், எல்லா உயிர்களின் மலமாசுகளை (குற்றங்களை)ப் போக்கிவிடுவ தால் சாரம் எனவும், அறியாமை, அஞ்ஞானம், முதலிய குறைபாடுகள் நீங்குமாறு செய்து தெய்வ ஒளியைப் புகுத் தலால் பசிதம் எனவும், இதற்குப் பெயர்கள் அமைந்தன என்பதை,

''நிடல் உறுந்தி வினையனைத்தும் நீற்றி விடலால் நீறென்றும்
விடில் வெறுக்கை தருதலினுல் விபூதி யென்றும்
உயிர்தோறும்
கூடு மலமா சினைக்கழுவும் குணத்தால் சாரம் என்றுமடம்
ஓட வளர்சோ தியைத்தரலால் பசிதம் என்றும் உரைப்பரால்''

எனப் பேரூர்ப்புராணம் சித்தரித்துக் கூறுகிறது,

போர்க்கோலம் கொள்வோர் தம் உடல்மீது கவசம் அணிந்து கொள்வார். இவ்வாறு செய்வதால் பகைவர் தாக்குதலிலிருந்து பாதுகாத்துக் கொள்ள இயலும். இது போன்றே, தீவினைகளிலிருந்து பாதுகாத்துக் கொள்ள அணியும் திருநீறு நமக்குக் ''கவசத்திருநீறு''. ஆகிறது எனத் திருமூலர் குறிப்பிடுகிருர்.

காலை, மாலை, நண்பகல், நள்ளிரவு ஆகிய இந்நான்கு காலங்களிலுமன்றி எச்செயலும் புரிவதற்கு முன்னும் பின்னும் திருநீறு தரித்துக்கொள்ளுதல் முறை என்பதை பெரிய புராணம் (திருஞானசம்பந்தர் புராணம் —208 ஆவது பாடல்) குறிப்பிடுகிறது.

ஆச்சாரியரிடமிருந்து சிவதீட்சை பெற்றுச் சிவவழி பாடுசெய்வதே முறையாகும். ஆனால் சிவதீட்சை பெறு பவர்களின் எண்ணிக்கை அதிகமில்லை. இந்நிலைக்குப் பல காரணங்கள் உள்ளன. அவற்றை இங்கு ஆராய வேண் டுவதில்லை. எனினும், பலர் சுருக்க முறையில் வழிபாடு செய்து வருகிறார்கள். திரு ஐந்தெழுத்து ஓதுவதற்கு ஆசாரியரிடமிருந்து சிவதீட்சை மூலம் அதிகாரம் அளிக் கப்பெறவேண்டும். பெரும்பான்மையோர் பஞ்சாட்சரப் பதிகம் ஓதி விபூதி தரித்துக் கொள்கிறார்கள். திருநீறு அணியும் போது ''சிவாய நம'' என ஓதும் முறையை அப்பர் அடிகள் எடுத்துக்காட்டுகிறார்.

''திருவாய் பொலிய சிவாய நமஎன
நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நிபா திரிப்புலி
யூர்அரனே''

என்பது அவரது வாக்கு.

இன்னும் சுருக்கமாக எடுத்துக்காட்டுகிறார் திருமூலர். ''சிவசிவ'' என ஓதுமாறு அவர் குறிப்பிடுகிறார். சிவசிவ எனச் சொல்லிவந்தால் தீவினை மாளும். தீவினை மாண்ட விடத்தும் சிவசிவ என ஓதிவந்தால் தேவராகவும் ஆகமுடி யும், பின்னர் சிவசிவ என ஓத ஓத (அதாவது ஓதிமுடிக்கு முன்னரே) சிவகதி கிடைக்கும் என்று அவரது பாடல் தெரிவிக்கிறது.

''சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே''

சிவசிவ என்னும் மந்திரத்தை எத்தனை தடவைசொல்கிறார்களோ அத்தனை மடங்கு பயன் ஏற்படும் என்பர். ஆயினும், கால வரம்பை முன்னிட்டுச் சிலர் அஷ்டோத்திரம் என்று 108 தடவை அத்திருநாமத்தை ஓதுவர். உருத்திராக்க மாலை, துளசிமாலை, பவளமாலை முதலியவற்றின் மணிகளை எண்ணுதல்மூலம் 108 தடவைகளைக்கணக்கிடுவர். இச்சாதனங்கள் கிடைக்கப் பெறாத விடத்தும், தம்தம் கைகளின் உதவியால் கணக்கீடு செய்து கொள்ள இயலும். வலக்கையின் பெருவிரலைக் கொண்டு, சுண்டு விரல் முதல் நான்கு விரல்களின் நான்கு பாகங்களைத் தொட்டுச் சிவசிவ என்பதால் 16 தடவைகளும், பின்னர் சுட்டுவிரலால் பெருவிரலின் நான்கு பாகங்களை அவ்வாறு தொட்டுச் சிவசிவ என்பதால் 4 தடவைகளுமாக, மொத்தம் 20 தடவைகள் முற்றுப்பெற்றவுடன், மடக்கிவைக்கப் பெற்ற இடக்கையிலிருந்து சுண்டுவிரலை விரிப்பதன் மூலம் 20 தடவைகள் ஒருமுறையில் முடிவுற்றதைக்கணக்கிடலாம். இவ்வாறே மற்றுமுள்ளமுறைகள் நான்கிலும் ஒவ்வொரு முறையிலும் 20 தடவைகள் முற்றுப்பெற முற்றுப்பெற இடக்கையிலிருந்து மற்றவிரல்களை விரித்துக் கொள்ளலாம். இவ்வகையில் 100 தடவைகள் சிவசிவ என ஓதுவது நிறைவுறும். பின்னர் வலக்கை சுண்டுவிரல் மோதிர விரல் ஆகியவற்றில் 8 பாகங்களையும் பெருவிரலால் தொட்டுச் சிவசிவ என்பதால் எஞ்சிய 8 தடவைகளும் நிறைவுறும். இதனால் 108 தடவைகள் "சிவசிவ" என்னும் மந்திரத்தை ஓதித் தியானத்தை நிறைவுசெய்து கொள்ளலாம்.

விபூதி அணிந்து கொள்வதால் நம்மைநாமே தூய்மை செய்துகொள்கிறோம். தூய்மை செய்து கொள்வதால் ஆற்றல் மிகும். பிறருக்கு உதவும் வகையிலும் ஆற்றல் வந்து சேரும். உருத்திராக்கம் அணிவதும் அவசியமே. மக்கள் வருந்தும் நிலைகண்டு சிவபெருமான் உகுத்த கண்ணீர் உருத்திராக்கமரமாயிற்று என்கிறது சமயசாத்திரம். எனவே விபூதி ருத்திராக்கம் இவ்விரண்டும் சிவசின்னங்கள். இவை அன்புச்சின்னங்களும் ஆகும். இவற்றுடன், சிவபெருமானை அவரது மந்திரப் பெயராகிய "சிவசிவ"

என்பதை ஓதிப் பலநாட்களாக அழைத்து வருவோம் எனில். "ஏது? இந்த ஏழை அடியான் பல நாளும் நம்மை அழைத்துக்கொண்டே இருப்பான். இதில் தவறிவிட மாட்டான்" எனச் சிவபெருமான் திருவுள்ளம் கொண்டு நேராக வந்து அருள் வழங்கிடுவார்." என்பதாக அப்பர் பெருமான் வலியுறுத்துகிருர்.

''சிவன்எனும் நாமம் தனக்கே உடையசெம் மேனிஎம்மான்
அவன்எனை ஆட்கொண்டு அளித்திடும் ஆகில்
அவன்தனையான்
பவன்*எனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்
ளுள்அழைத்தால்
இவன்எனைப் பன்ளுள் அழைப்புஒழி யான்என்று
எதிர்ப்படுமே''
—தேவாரம்.

---

*பவன் என்னும் பெயர் சிவன் என்னும் நாமத்திற்கு அடுத்த நிலையில் உள்ள பெயர்,

---

# திருத்தொண்டர்

வித்துவான் சைவப்புலவர் சி. குமரேசபிள்ளை

தொண்டு என்னும் சொல் ஆழ்ந்த பொருளைத்தருவது. தொழில், வேலை, அலுவல், பணி, தொண்டு என்பன செயல் என்னும் ஒருபொருளையே தருமாயினும் செய்பவனது வெவ்வேறு இயல்பைக்காட்டுகின்றன. தன்னலம் கருதி வெவ்வேறு நிலையில் செய்யப்படும் செயல்கள் தொழில், வேலை, அலுவல் எனும் பெயர்களைப்பெற, தன் முனைப்பற்றச் செய்யப்படுவது பணி என்னும் பெயர் பெறும். அந்நிலையிலே பணியாற்ற முன்வந்த நாவுக்கரசு பெருமான் 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ருர். அப்பணியும் பிறரையும் வழிநடத்தச் செய்யப்படுமாயின்

தொண்டு எனப்படும். இத்தொண்டும் செய்பவனது ஞான நிலைக்கேற்பப் பலதிறப்படுவதாகும்.

சைவசித்தாந்த சாத்திரங்கள் ஞானவரம்பினை மூன்றாகப் பகுக்கும். அவை பாசஞானம், பசுஞானம், பதி ஞானம் என்பன. இவ்வுடலே நானென்றும், இவ்வுலக இன்பங்களே மெய்யென்றும், இவ்வுலக இன்ப துன்பங்களை அநுபவிப்பது இவ்வுடலாகிய நானேயென்றும் கருதுவது பாசஞானம், நான் உடலல்ல, உடல்சடம் உடலை இயக்குகிற அறிவுடைய பொருள் ஒன்று உண்டு, அதுவே நான் எனப்படும் உயிர் அல்லது ஆன்மா. அவ்வான்மாவே சுதந்திரமுடைய தலைமைப்பொருள் எனக்கருதுவது பசு ஞானம். பசுஎனப்படும் இவ்வான்மா சுதந்திரமுடைய பொருளன்று; உடலுக்குள் உயிர்நின்று இயக்குவதுபோல உயிர்க்குயிராக இருந்து அவ்வுயிரை இயக்கும் தலைமைப் பொருள் ஒன்றுண்டு, அதுவேபதி, உலகுயிர்களை அவற்றோடு ஒன்றாகக்கலந்து நின்று ஊக்கியும், வேறாகநின்று காட்டியும், உடனாக இருந்து ஊட்டியும்வருவது அப்பதியே என உணர்வது பதிஞானம்.

இவ்வுடலே நானென்று கருதுவதாகிய பாசஞான உணர்வோடும், உயிரை முதன்மைப் பொருள்எனக் கருதுவதாகிய பசுஞான உணர்வோடும் செய்யப்படுவனவாகிய செயல்களனைத்தும் பசுகரணச் செயல்கள். இவ்வுணர்வுகளுடனே பிறர்நலம் கருதி ஆவிற்கு நீரளித்தல் முதலாக நாட்டுத்தொண்டு ஈறாக ஆற்றப்படும் பணிகளும்; ஆன்ம ஈடேற்றம் கருதிப் புறச்சமயநெறிநின்றும், அகச்சமயம் புக்கும், புகன்மிருதிவழியுழன்றும் புகலும் ஆச்சிரம அறத்துறைகள் பயின்றும், அருந்தவங்கள் புரிந்தும், ஆரணங்கள் படித்தும், சிறப்புடைய புராணங்கள் மிகத்தெரிந்தும், வேதசிரப்பொருளைத் தெரிந்தும் ஆற்றப்படும் பணிகளும் பசுகரணத்தொண்டு எனப்படும். இத் தொண்டுகளைச் செய்து பெறும்புண்ணியம் பசுப்புண்ணியமாம். இப்

புண்ணிய வசத்தால் ஆன்மாவிற்குப் பதிஞானம் தலைப் படுகிறது. இப்பதிஞானத்துள் தலைப்படுதலையே சைவத் திறமடைதல் எனக்கூறுவர். அத்திறமடைந்தார் 'அப் பதியே முழுமுதல்; அவனன்றி ஓரணுவும் அசையாது' என உணர்ந்து, ஐம்புலநுகர்வாகிய பாசஉணர்வு அறுதற் பொருட்டும், தன்னபிமானமென்னும் பசுஉணர்வு நீங்குதற் பொருட்டும், செய்கின்றதாகிய சரியை கிரியை யோகம் ஆகியவைகளும் அவைபற்றி நிகழும் ஞானச்செயல்களும் பதிகாரணச்செயல்கள். இப்பதி ஞானநிலையிலே 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனக்கொண்டு, ஐம்புலக்கள்வரால் அலைப்புறும் பசுபாச இயல்பினரைக் கண்டு இரக்கம் கொண்டு, அவர்களுக்குப் பதிஞானத்தை ஊட்டும் வகையில் ஆற்றப்படும் தொண்டு பதிகாரணத் தொண்டு எனப்படும். இப்பதிகாரணத்தொண்டே திருத் தொண்டு எனச்சிறப்பித்துக் கூறப்படும். என்னெனில் 'திரு' என்பது முக்திச்செல்வம், உலகச்செல்வமன்று. இரண்டனையும் வேறுதிரித்துக் காட்டவே அப்பர்பெருமான் 'திருவே, என் செல்வமே' என்றார். முக்தியைத் தருவ தாகிய சைவத்திறவழிநின்ற திருநாவுக்கரசு பெருமானை "திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட திருநாவுக் கரசு" என்றார் சுந்தரர். இத்தகையவாய திருத்தொண் டைப் புரிந்தவர்கள் திருத்தொண்டர்கள்.

திருத்தொண்டர்கள் திருத்தொண்டைப் புரிந்த வரலாற்றைக் கூறும் புராணம் 'திருத்தொண்டர் புராணம்' பதிஞான உணர்வுடையராகிய இத்திருத்தொண்டர்களால் செய்யப்பட்ட தொண்டுகள், ஏனைய பசுபாச உணர்வு மட்டுமுடையோரால் செய்தற்கரிய தொன்றாகலின் அவை செயற்கரிய செயல்களாம். 'செயற்கரிய செய்வார் பெரியர்'. என்பார் வள்ளுவப் பெருந்தகையாரும். ஆகவே சைவப் பெருமக்கள் திருத்தொண்டர்களையே பெரியார் எனக் கொண்டனர். அவர்களைப் பேசும் புராணத்தைப் 'பெரிய புராணம்' என்றும், 'பெரியர் புராண' மென்றும்

போற்றுவாராயினர். பெரியராம் இத்திருத்தொண்டர்களின் பெருமையினை மாதவஞ்செய் தென்திசையறிந்து வாழ வேண்டுமென்பதற்காகவே, கயிலையிலே திருத்தொண்டு புரிந்துகொண்டிருந்த ஆலால சுந்தரரைத் தமிழகத்தில் நம்பி ஆரூரராக அவதரிக்கச் செய்தார் சிவபெருமான். அத்திருத்தொண்டரைத் திருவாரூருக்கு அழைத்து, திருத்தொண்டர்கள் பெருமையினை உணர்த்தி, மறை யளித்த திருவாக்கால் 'தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டர் தொகையினைப் பாடச்செய்தார். அத்திருத்தொண்டத் தொகைக்கு நாரையூர் நம்பிமுதன் பொருளுரைக்க நம்பியாண்டார் சுருதிமொழிக் கலித்துறை அந்தாதியால் வகைசெய்தார். வகையை விரிவு செய்யப் புகுந்த சேக்கிழார் பெருமான், திருத்தொண்டர் பெருமை அறிவாற்றலால் அளவிடுதற்குரிய தன்று; அருளாற்றலாலே உணர்தற்குரியதொன்று என்பதனையுணர்ந்து, தில்லைச் சென்று தவமிருக்க, தில்லைப்பெருமான் 'உலகெலாம்' என முதலடி எடுத்துக் கொடுக்க, பதி உணர்த்திய அந்த ஞான உணர்வு வழிநின்று திருத்தொண்டர் புராணமாம் பெரியபுராணத்தைப் பாடியருளினர்.

பதிஞானம் தலைநின்ற இப்பெரியோர்களால் ஆண்டவன் அறிவுறுத்தலின்படி தொகுத்தும், வகுத்தும், விரித்தும் பேசப்பட்ட திருத்தொண்டர்களின் பெருமையினையும், அவர்களாற்றிய செயல்களின் அருமையினையும் பதிஞானம் தலைக்கூடும் சைவத்திறத்து நின்று அறிந்து உணர்ந்து உய்யும்வகை தேடுதலே அறிவுடைமையாம் அமைவுடைமையுமாம். இத்திருத்தொண்டர்கள் பதிஞானமெனப்படும் சிவஞானம் கைவரப்பெற்ற ஜீவன்முக்தர்களென்பதையும், அந்நெறியிலே நின்று திருத்தொண்டுபுரிந்த திருத்தொண்டர்களென்பதையும் கருத்திற்கொண்டு அவர்களாற்றிய திருத்தொண்டின் அருமை பெருமைகளை அறிய முற்படுவார்க்கு உதவும் உரைகல்லில் பதித்த ஆணிப்

பொன்னுக, தம் திருத்தொண்டர் புராணத்தின் முற்பகுதியில் அமைந்த திருக்கூட்டச் சிறப்பில் சிலபாடல்களைச் சேக்கிழார் பெருமான் தருகின்றார்.

"அத்தர் வேண்டிமுன் ஆண்டவர் அன்பினால்
மெய்த்த ழைந்து விதிர்ப்புறு சிந்தையர்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
இத்தி றத்தவர் அன்றியும் எண்ணிலார்"

(பெ. பு. திருக்கூட்டச்சிறப்பு 5)

என்பது அப்பாடல்களுள் ஒன்று. திருத்தொண்டர்கள் 'அத்தர்வேண்டிமுன் ஆண்டவர்; அதாவது சிவபெருமானால் விரும்பி முன்னரே ஆட்கொள்ளப்பட்டவர், அன்றியும் உலகவர் உய்யவேண்டி அவர்கள் முன்னிலையில் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டவர் என இருபொருள்பட அமைக்கப்பட்ட அத்தொடரால் திருத்தொண்டர்களின் முன்னைய நிலையினையும், பிறப்பின் நோக்கத்தையும் புலப்படுத்துகின்றார்.

இவ்வளவைக்கு இலக்கியமாகப் பெரியபுராணம் முழுதும் பலசான்றுகளைக் காணலாம். சிவபெருமான் திருநாவலூரரைத் திருவெண்ணெய் நல்லூரில் ஆட்கொண்டபோது,

"முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கைகூரப்
பின்புநம் ஏவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத்
தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத்
தாண்டோம் என்றார்"

(பெ. பு. தடுத்தாட்கொண்ட பு-67)

நாவலூரர் இவ்வுலகில் சடையனார் இசைஞானியாருக்குத் திருமகனாகப் பிறப்பதற்குமுன் திருக்கயிலையில் ஆலால சுந்தரராய்த் திருத்தொண்டு புரிந்து வந்ததையும், தமிழகம்

திருத்தொண்டர்களின் பெருமையை அறிந்து உய்யும் பொருட்டுத்திருத்தொண்டத்தொகையைச் சுந்தரர்தெய்வத் தமிழில் பாடவேண்டுமென்று ஆண்டவன் திருக்குறிப்புக் கொண்டதனால், கயிலையில் உமாதேவியாருக்குத் திருத் தொண்டு புரிந்து வந்த அநிந்திதை கமலினியார் எனும் பெணகள் மீது சுந்தரர் விருப்புக்கொள்ள, அதனை முன் னிட்டுச் சிவபெருமான் இட்ட கட்டளையின்படி சுந்தரர் நாவலூரராய் இம்மண்ணின்மீது பிறந்ததையும், அவ்வாறு பிறந்த நாவலூரரைத் துன்பமிக்க இவ்வுலக வாழ்க்கைத் தொடராதிருக்கும் பொருட்டு அவர் திருமணத்தை தடுத்து, உலகவர் அறிய மறையவர் முன்னர்த் தாம் ஆட் கொண்ட அருட்செயலையும் குறிப்பிடுகின்றார்.

திருஞானசம்பந்தர் திருத்தொண்டராகவே பிறந்தரு ளிய பெருமையினைச் சேக்கிழார் பெருமான்,

"பண்டு திருவடி மறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டின் அளித்தருளத்
தொண்டினிலை தரவருவார்"

—(பெ.பு. திருஞான. பு. 55)

எனக் கூறுகின்றார். திருஞானசம்பந்தப் பெருமான் இப்பிற விக்கு முன்னமே, தம்மை மறவாது திருத்தொண்டு புரிந்து வந்தவரென்றும், சமண் சாக்கியங்களை அழித்து சைவ நெறி தழைக்கச் செய்யவல்ல ஒரு மகன் தனக்கு உளவாக வேண்டுமென சிவபாத இருதயர் வழிபாடு செய்து வந்த மையால் திருத்தொண்டின் பெருமையினை இவ்வுலகுக் கறிவுறுத்தத் தோற்றுவித்தார் என்றும் குறிப்பிடுகின்றார்.

சமண மதத்தைச் சார்ந்த தம் தம்பியார் திருந்திச் சைவம் சார வேண்டுமென்று திலகவதியார் திருவதிகை வீரட்டானத் திறைவனை வேண்டினார். வேண்டியார்க்கு வேண்டியாங் குதவும் பெருமானார் அம்மையார் கனவில் தோன்றி,

"உன்னுடைய மனக்கவலை ஒழிநீஉன் உடன்பிறந்தான்
முன்னமே முனியாகி எமைஅடையத் தவம்முயன்றான்
அன்னவனை இனிச்சூலை மடுத்தாள்வம்"
—(பெ.பு, திருநாவு. பு. 48)

என அருளினார். திருநாவுக்கரசு பெருமான் முற்பிறவியில் கயிலையில் அருந் தவம் ஆற்றிவந்த வாகீச முனியே; இப்பிறவியிலும் அத்தொண்டரைச் சூலை மடுத்துத் திருத்தி ஆள்வோம் என்றார். திருநீலகண்டரை ஆட்கொள வந்த இடத்தை,

(....................தொண்டரை விளக்கங்காண
நன்னெறி யிதுவாமென்று ஞாலத்தோர் விரும்பியுய்யும்
அந்நெறி காட்டுமாற்றால் அருட்சிவ யோகியாகி"
—(பெ.பு. திருநீல. பு–10)

என்றும், இளையான்குடி மாறநாயனாரை ஆட்கொள அருளிய வறுமையைக் கூறும்போது,

"செல்வ மேவிய நாளில் இச்செயல் செய்வதன்றியும் மெய்யினால்
அல்லல் நல்குர வானபோதிலும் வல்லர் என்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வம் மெல்ல மறைந்து நாள்தொறும் மாறிவந்
தொல்லை யில்வறு மைப்ப தம்புக உன்னி னார்தில்லை மன்னினார்"
—(இளையான்குடி 6)

என்றும், இயற்பகை நாயனாரை ஆட்கொள வந்த இடத்தை,

"மாய வண்ணமே கொண்டுதம் தொண்டர்
மருதவண்ணமும் காட்டுவான் வந்தார்"
—(இயற்பகை. பு.-4)

என்றும் கூறுகின்றார். இவற்றைச் சிந்தனை செய்யும் போது, இன்னோரன்ன திருத்தொண்டர்கள் அத்தரால் முன்னமே ஆட்கொள்ளப்பட்ட அடியார்களென்பதும்,

உலகமுய்யவே பிறப்பித்து உலகவர் முன் ஆட்கொள்ளப் பட்டவர் என்பதும் புலனுகின்றதல்லவா?

இத் திருத்தொண்டர்கள் இவ்வுலகில் வாழ்ந்து வந்த திறம் நாம் அறிந்து உய்வதற்குரியது. அத்திறத்தினையே சேக்கிழார் பெருமான்,

'...... ................................அன்பினுல்
மெய்த்தழைந்து விதிர்ப்புறு சிந்தையர்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினர்" என்கிருர்.

பெரிய புராணத்துள் பேசப்படும் திருத்தொண்டர்களுள் இல்லறத்தார் சிலர், துறவறத்தாரும் சிலர்; அவர்கள் குலத் தாலும் தொழிலாலும் பலதிறப்பட்டவர்கள்; எனினும் பதிஞான உணர்வு வழிநின்று ஆற்றிய திருத்தொண்டால் ஒன்றுபட்டவர். அப்பதியின்பால் தமது அறிவு பொருந்த அப்பூரண அறிவோடு அதுவதுவாகி ஒன்றித்து இன்புறு கின்ற பெருநிலை எய்தியவர். அவ்வுணர்வால் பொறிபுலன் களும் தழைந்து விதிர்ப்புறச் சொல்லொணு ஆனந்த நிலை யினர். இந்நிலையாம் இறைபணியினின்றும் சிறிதும் வழு வாதவராகியே, பிறப்பாலோ அமைவாலோ தம்பாற்பட்ட கருமங்களை, கருமத்தின்மீது தனக்கெனும் பற்றுமின்றி, செய்வதுதான் எனும் முனைப்புமின்றி, உயிர்நாதன் உள் நின்று உணர்த்தச் செய்யப்படுவதாகிய கடப்பாடு எனும் பதி உணர்வோடு திருத்தொண்டு புரிபவர். இந் நிலையின ராகிய அடியார்களையே,

"தேசம் இடம் காலம் திக்காசனங் கள்இன்றிச்
செய்வதொன்று போல்செய்யாச் செயலதனைச்
செய்தங்கு
ஊசல்படும் மனமின்றி யுலாவல் நிற்றல்
உறக்கம் உணர்வு உண்டி பட்டினியிருத்தல் கிடத்தல்
மாசதனில் தூய்மையினில் வறுமை வாழ்வின்
வருத்தத்தில் திருத்தத்தில் மைதுனததில் சினத்தில்
ஆசையினில் வெறுப்பில் இவையல்லாதும் எல்லாம்
அடைந்தாலும் ஞானிகள்தாம் அரனடிமை அகலார்'
(சித்தியார். 8-2-33)

என்று சித்தியார் பேசுகிறது. இவ்வாறு அரனடி அகலாது திருத்தொண்டர்கள் திருத்தொண்டாற்றிய சிறப்பினைப் பெரியபுராண முழுதும் பரக்கக் காணலாம்.

சுந்தரர் பெருமான் பரமனையே வேண்டிப் பரவையாரைத் திருமணம் செய்து கொண்டார். ஒருமணத்தைத் தவிர்த்த பெருமானாலேயே கூட்டுவிக்கப்பட்ட பரவையாரோடு சுந்தரர் வாழ்ந்து வந்த நிலையைச் சேக்கிழார் பெருமான்,

"தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலுஞ் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனும்
மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச் செல்கின்றார்"
(பெ.பு. தடுத்தாம்-4-182)

என்கின்றார். சுந்தரர் தமது ஆன்மநாயகனாகிய சிவபெருமானது பாத கமலங்களோடு தன்னை முழுதும் சார்வித்து அந்த இன்ப அன்புணர்விலே நின்று மெய்த்தளர்ந்து விதிர்ப்புறு சிந்தையராகி, அவனருள் வழிநின்றே தமிழ் மாலைகளைச் சாத்திப் பரவையாருடன் விளையாடிச் செல்கின்ற கடப்பாட்டுத் திறத்தினைப் புலப்படுத்துகின்றார்.

மெய்ப்பொருள் நாயனார் பிறப்பாலமைந்த அரசியல் பணியை ஆற்றி வருகின்றார். அப்பணியை அமைவுடன் ஆற்றிவருதலோடுகூட வேதநன்னெறி வாய்மையாம் அடியாரை அரனெனவே வழிபடுதலாகிய திருத்தொண்டினைக் கொண்டு வாழ்ந்த சிறப்பினைத் தொண்டர் சீர்பரவுவார்,

'அரசியல் நெறியில் வந்த அறநெறி வழாமல் காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகள் மாற்றி
உரைதிறம் பாதநீதி ஓங்குநீர் மையினில் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர் வேடமே சிந்தை' செய்வார்
—(பெ.பு. மெய்ப்பொருள்-2)

என்று கூறுகின்றார். மெய்ப்பொருளார் முறை தவறாது ஆட்சிசெய்தார்; தம் தோள் வலிமையாலே பகைவரை வென்றார். நீதிநூற்கூற்றுப்படி நீதிவழங்கினார். கடப்பாடாக இத்தொண்டுகளைத் திறம்பட ஆற்றிவந்தாலும் உள்ளம் அடியாரை அரனாக நினைந்து தொழுது வந்தது.

காரைக்காலம்மையார் பேதைப் பருவத்தில் விடையவர் பால் அல்கிய அன்போடு அழகின் கொழுந்து எழுவதென வளர்ந்தார். பெதும்பைப் பருவத்தில் அல்கிய அன்பு மேலும் விரிய 'வண்டல்பயில்வன வெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை அண்டர்பிரான் திருவார்த்தை அணையவருவன பயின்று வந்தார். மங்கைப் பருவத்திலோ தொண்டர் வரில் தொழுது போற்றும் கொள்கையராயினர். வயதோடு இறையன்பும் வளர்ந்துவர பரமதத்தனுக்கு வாழ்க்கைத் துணைவியாய் அமைந்தார். அந்நிலையிலும் கணவனுக்குகந்த கற்புடைய மங்கையாய் வாழும் கடப்பாட்டிலும் சிறிதும் தாழாமல் விடையவர்பால் அன்பு மேலும் ஓங்கிப்பெருக வாழ்ந்து வந்த அற்புதத்தைச் சேக்கிழார் பெருமான்,

'ஆங்கவன்தன் இல்வாழ்க்கை அருந்துணையாய் அமர்கின்ற
பூங்குழலார் அவர்தாமும் பொருவிடையார். திருவடிக்கீழ்
ஓங்கியஅன் புறுகாதல் ஒழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில்வரும் மனையறத்தின் பண்புவழா மையில்
பயில்வார்

(பெ.பு. காரைக்கால் புராணம்-14)

என்கிறார். "ஓங்கிய அன்புறு காதல் ஒழிவின்றி மிகப் பெருக" எனக்கூறி பெருகிய அன்பு தைலதாரைபோல் இடையீடின்றிப் பாய்ந்து கொண்டிருக்கின்ற திருத்தொண்டரின் அரிய இயல்பை அருமையாகப் புலப்படுத்துகின்றார்.

இத்திருத்தொண்டர்களின் மாண்புதான் என்னே! இவர்களது பெருமை நம்மால் பேசக்கூடியதா! எத்துணைப் பேசினும் அமையுமோ?

'பெருமையால் தம்மைஒப்பார்; பேணலால் எம்மைப் பெற்ருர்;
ஒருமையால் உலகைவெல்வார்; ஊனம் மேல்ஒன்று மில்லார்
அருமையாம் நிலையில்நின்ருர்; அன்பிஞல் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்துநின்ருர் இவரைநீஅடைவாய்' என்று

சுந்தரர்க்குச் சிவபெருமானே அறிவுறுத்திஞர் என்ருல், திருத்தொண்டர் பெருமையினே வேறுயார் அளவிட்டுரைத்தல் இயலும்? இம்மை மறுமை ஆகிய இருமை நிலைகளேயும் கடந்து, எக்கருமம் செய்தாலும் எதவத்தைப் பட்டாலும் இடையரு அன்புத்தம் ஊடகத்தே நின்றுருகும் தன்மையில் சிறிதும் வழுவாது வீடுபேறு ஒன்றிற்கே உரியவராய், உலகமுய்யக் கடப்பாடாற்றிய ஜீவன்முக்தர்களே இத்திருத்தொண்டர்கள் என்பதனே உளத்திற்கொண்டு, அவர் தம் வரலாற்றிலே புகுந்து, அரிய செயல்களேச் சிந்தித்து ஆன்ம ஈடேற்றம் அடைவோமாக.

---

சிவமயம்

திருவான்மியூர்

# சிவபெருமான் பதிகம்

மகான்–வண்ணச்சரபம்,

அருள்மிகு. தண்டபாணிசுவாமிகள் அருளியது.

காப்பு—வெண்பா

திருவான்மி யூர்ச்சிவனே! சீதரனும் போற்றும்
ஒருவா! புலித்தோல் உடையாய்!—மருவார்
கடுக்கையணி வானே!நின் கண்ணருளால் என்றன்
இடுக்கணெலாம் தீர்த்தருளின் றே.

நூல்
கொச்சகக்கலிப்பா.

அங்கமுற்றும் வெண்ணீ(று) அணியும்உன(து) அடியார்பால்
வெங்கலிநோய் மருவிலுன்றன் வியன்புகழ்க்கோர் இழிவன்றோ?
பங்கமில்சீர்த் தென்னளகைப் பதியுடையான் உயிர்போல்வாய்!
செங்கண்விடைப் பரியூர்வாய்! திருவான்மி யூர்ச்சிவனே.

2

மௌவலந்தோட் புரவலர்தம் வாழ்வினையும் மதியார்தாம்
எவ்வமுறக் காணினும்சற்(று) இரங்காதல் முறைதானோ?
பௌவவிடம் உண்டோனே! பரமாய பண்ணவனே!
செவ்வரிக்கண் உமைபங்கா! திருவான்மி யூர்ச்சிவனே.

3

இருக்குமுத லாயமறை ஈரிண்டும் ஏத்தரிதாப்
பெருக்கும்உன்றன் புகழ்சிறிது பேசும்நலம் பெறுவேனோ?
மருக்கமழ்பூங் கொன்றையணி வார்சடையில் மதிவைத்தாய்!
திருக்கொழியத் தடுத்தாள்வாய்! திருவான்மி யூர்ச்சிவனே.

4

நாவேறு மவள்கேள்வன் நடுத்தலையிற் பலிகொள்வாய்!
பாவேறப் புனைவார்க்குப் பரிசளித்த விதம்யாதோ?
தாவேறும் வல்லவுணர் தமக்கும்அருள் புரிவானே!
சேவேறும் பெருமானே! திருவான்மி யூர்ச்சிவனே.

5

புத்தர்முதற் பகர்கின்ற புலைச்சமையத் தினர்முன்னென்
சித்தமொல்கித் தளராமற் றிருவருள்வாழ் வடையேனோ?
மத்தமெருக் காத்திதும்பை வன்னிமுதற் சென்னியிற்கொள்
சித்தனே! ஈடில்புகழ்த் திருவான்மி யூர்ச்சிவனே.

6

பூணாரை முலைமின்னார் பொய்ப்போக மயல்கொண்டு
நாணாமற் றிரிவேற்கு நலம்சிறி(து)ஈந் தருள்வாயோ?
ஆணாதி ஒருமூன்று ஆகியொன்றும் ஆகானே!
சேணாடர் பணிகொள்ளும் திருவான்மி யூர்ச்சிவனே.

7

கரியவனும் காணுநின் கழல்பாடிக் கசிந்துருகா(து)
உரியவினைப் போகத்தூ(டு) உழல்வேனும் உய்வேனோ?
கிரியினைவில் லெனக்கொண்டு கிளர்ஜளிப்புன்
னகைதன்னால்
திரிபுரம்நீ றெழச்செய்தாய்! திருவான்மி யூர்ச்சிவனே.

8

மிக்கபுகழ்ப் பார்த்தனது வில்லடிக்கு, விறல்வாளி
அக்கணத்தன்(று) அருள்செய்தாய்! அடியேனுக்
கிரங்காயோ?
முக்கணுடைப் பெம்மானே! மூவருக்கும் முதலானாய்!
திக்கடங்க உணர்சீலத் திருவான்மி யூர்ச்சிவனே.

9

அத்திமுகத் தினன் செவ்வேள், ஆகும்இரு வரைப்பெற்றாய்!
நத்தியுனைப் போற்றிசைக்கும் நாயடியேற்(கு) இரங்காயோ!
பத்திவலைப் படல்கூறிப் பணிந்தானுக்(கு) அருள்செய்தாய்?
சித்தியொடு முத்திநல்கும் திருவான்மி யூர்ச்சிவனே.

10

நால்வர்களுக்(கு) அருள்செய்த நலம்கேட்டு
நண்ணியுன்றன்
பால்வரும்என் றனக்கான பரிசின்னே தரவேண்டும்!
கோல்வனப்புக் கண்ணாளைக் குலவிடைமேற்
கூடவைத்தாய்!
சேல்வளநீர் வயல்காட்டும் திருவான்மி யூர்ச்சிவனே.

11

செல்வமலி தருபான்மைத் திருவான்மி யூர்ச்சிவன்பால்
நல்வரம்பெற் றுய்வதெண்ணி நறுந்தமிழ்த்தென்
மலயமெனும்
கல்வரைப்பால் அவிர்கின்ற கழைவனத்தோன் கழறுமிவை
சொல்வதனிற் றுணிவுற்றோர் துயர்சிறிதும் தோயாரே.

முற்றிற்று.

தெய்வமே துணை.

*ஸ்ரீ தண்டபாணிசுவாமிகளால் சுமார் 80 ஆண்டுகட்கு முன் பாடப்பட்டு அவர்கள் கரத்தால் பனைஓலைச் சுவடியில் எழுதப் பெற்ற பதிகம் இது.

காப்பு. மருஆர் கடுக்கை - மணமிக்கக்கொன்றை. 1 கலி– வறுமை, அளகைப்பதி – குபேரபுரி. 2. மௌவல் - முல்லை, எவ்வம் – துயர், பௌவம் - கடல். 3. திருக்கு - வஞ்சம் 4. நா ஏறும் அவள் – கலைமகள். தா ஏறும் - குற்றமிக்க, சேவேறும்-இடபவாகனமுடைய, 5. மத்தம் – ஊமத்தமலர், 6. ஆண்டுஆகி மூன்று – ஆண், பெண், அலி என்பன- சேணுடர் - தேவர். 7. கரியவன் – திருமால். கிரியினை – மகாமேருவை. 8. திக்கு அடங்க - திசைமுழுதும்: பார்த்தன் - அருச்சுனன். 9: அத்திமுகத்தினன் - யானைமுகக் கணபதி. 9. பணிந்தான் - மணிவாசகர், "பக்திவலை யிற்படுவோன் காண்க" என்பது திருவாசகம் 10 கோல் வனப்புக்கண்ணாள் – அம்புபோற் கூர்மையுள்ள அழகியகண் உடைய உமாதேவி, விடை-இடபம். 11. மலயம் எனும் கல் – பொதியை என்றமலை. கழைவனம் - மூங்கிலைத் தல விருட்சமாகவுள்ள திருநெல்வேலி இத்தலம். தண்டபாணி சுவாமிகள் என்பவர் தான் இதனை இயற்றிய ஆசிரியர் என்ற குறிப்பு.

---

## "திருமயிலையும் பூம்பாவையும்" என்னும் நூலைப்பற்றிய ஒரு பாராட்டுரை"

வித்துவான்,வை. குஞ்சிதபாதம் பிள்ளை.

ஆக்கியோன் பெயர் முதலிய எட்டும் வாய்ப்பக் கூறல் பாயிரத்தின் இயல்பு என்றார் நன்னூலார். இப்பாராட்டுரை யும் பாயிரம் போன்றதே யாகலின் ஆக்கியோரைப்பற்றிச் சில கூறுவாம்.

"கற்றார்களேத்தும் கபாலீச்சரம்" எனத் திருஞானசம் பந்தப் பெருமானால் புகழப்பெற்ற "கபாலீச்சரம்" என்னுந் திருக்கோயிலைத் தன்னகத்தேகொண்டு விளங்கும் திருமயிலை யைப்பற்றிய வரலாற்றை 1 முதல் 26 பக்கங்களில் முதற் பகுதியாகவும், சிவநேசர் புதல்வி 'பூம்பாவை'யின் எலும்பைத் திருஞானசம்பந்தர் கபாலிச்சரம் அமர்ந்தான் திருமுன் 'மட் டிட்ட' என்னுந் திருப்பதிகம் பாடிப் பெண்ணுருவாக்கிய

நிகழ்ச்சியை 27 முதல் 67 பக்கம் வரை நாடகமாக இரண்டாம் பகுதியாகவும் "திருமயிலையும் பூம்பாவையும்" என்னும் பெயர் சூட்டி வெளியிட்டவர் ஓய்வுபெற்றுள்ள "தண்டல்நாயகம்" வித்துவான். உயர்திரு கோ. மு. முத்து சாமி பிள்ளை ஐ. ஏ. எஸ். என்னும் பெரியார்.

இவர் இப்போது அரசியலார் ஆணைக்கிணங்க கலைச்சொற்களையும், நிர்வாகச் சொற்களையும் தமிழாக்கம் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளார், இத்துடன் பல ஆண்டுகளாக நம் "சைவ சித்தாந்த சமாசத்"தின் தலைவராகவும் விளங்கிச் சீரிய சமயப்பணி செய்து வருகிறார். இவர் "பணியுமாம் என்றும் பெருமை" என்னும் பொய்யாமொழிக்கு இலக்கியமாகத் திகழ்பவர். நுண்மாண் நுழைபுலமுடைய பன்மொழிப்புலவர்; ஆராய்ச்சித் திறனுடையவர்; அரிய கருத்துக்களை எளிய நடையில் எழுதும் ஆற்றலுடையவர்; இறைவழிபாட்டிலும், சமயக் கொள்கைகளிலும் பெரிதும் ஈடுபாடுடையவர். உலக மக்களெல்லாரும் இறைவன் திருவருளைப் பெற்று இன்புற்று வாழ வேண்டுமென்னும் உயர்நோக்குடன் தொண்டு செய்து வருபவர். இத்தகைய பெரியார் நம்சமாசத்துக்குத் தலைவராக இருப்பது மிகவும் பொருத்தமும் சிறப்பும் உடையதாகும்.

நூலைப்பற்றிச் சிலகூறுவாம்: நூலின் தோற்றுவாயில் திருக்கோயில்களே மக்கள் வாழ்க்கைக்கு உயிர் நாடியாக இருப்பது என்பதை விளக்கியுள்ள திறம் பாராட்டத்தக்கது. மேலும், 1. சரித்திர உண்மை 2. புராதனவரலாறு என்னும் பகுதிகளை வரலாறு, கல்வெட்டு, இலக்கியம், திருமுறைகள் முதலிய சான்றுகள் கொண்டு சீர்பெற விளக்கியுள்ள நயம் போற்றற்குரியது. மற்றும் 3. திருவள்ளுவர் வாழ்ந்த திருமயிலை 4. தேவார ஆசிரியர்கள் கண்ட திருமயிலை 5. திருமயிலையின் தனிச்சிறப்பு என்னுந்தலைப்புக்களின் கீழ் விளக்கப் பெறுவன படிக்கப்படிக்க இன்பந் தருவனவாய் திருமயிலையின் வான்புகழை உள்ளத்தில் பதியவைக்கின்றன.

நாடகம் மிக நல்ல முறையில் அமைந்துள்ளது. சிவநேசர் வீட்டில் ஓதுவார் பாடும் "தோடுடைய செவியன்" என்னும் திருஞான சம்பந்தர் தேவாரத்துடன் தொடங்கும் நாடகம் இடத்திற்கேற்ற மிகப் பொருத்தமான தேவார திருவாசகப் பாடல்களுடன் பக்திச்சுவை ததும்ப நடைபெறுவது தனிப்பெருஞ் சிறப்பாகும். நாடகபாத்திரங்களின் உரையாடல்கள் சாத்திர தோத்திரக் கருத்துக்களைக்கொண்டு செந்

தமிழ் நடையிலும் தெய்வமணங்கமழும்வகையிலும் அமைந்து உள்ளத்தைக் கவர்கின்றன. குன்றை முனிவராம் சேக்கிழாரே முத்துசாமியார் உள்ளத்தில் புகுந்து 'பூம்பாவை' நாடகத்தை எழுதுவித்தார் எனக்கருதுகிறேன், இறுதியிற் காணும் ஒன்பான் சுவைபற்றிய தேவார திவ்வியப் பிரபந்தப் பாடல்களும் விளக்கங்களும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன.

இராமகிருஷ்ண உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் 20-2-1966மாலை திருமயிலையிலுள்ள இராமகிருட்டினர்மண்டபத்தில் பக்திச்சுவைததும்ப அழகுற நடித்துக்காட்டியதை நூலாசிரியருடன் பார்க்கும் பேறுபெற்றேன். இந்நாடகத்தைச் சீரிய முறையில் நடத்திக்காட்டிய மாணவர்களையும். அதனைக்கற்பித்த ஆசிரியர்களையும், நாடகம் இயற்றிய ஆசிரியரையும், இதற்குத் தலைமை வகித்து மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கிப் பாராட்டுரை வழங்கிய திருமயிலைத் திருக்கோயில் அறங்காவற் குழுத் தலைவர் உயர்திரு. அய்யா, சுப்பிரமணிய முதலியார், J. P. அவர்களையும், பெரிதும் பாராட்டுகிறேன். இந்நாடகத்தை ஆண்டுதோறும் திருமயிலையில் நடைபெறுந் திருவிழாவில் நடைபெறச் செய்யும்படி அறங்காவலர்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

புகழ் வேண்டா சைவப் புரவலராகிய நம் உயர்திரு. முத்துசாமி பிள்ளையவர்களுக்கு செல்வ வாழ்க்கையில் ஏதொரு குறைவுமில்லை. அத்தகைய பெரியார் நாடகம் நடக்குமிடத்தில் 'பூம்பாவை' நாடக நூலை விற்கக் கொடுத்து அங்கு விற்பனையாகாத நூல்களை யாரையுந் தூக்கவிடாமல் அவரும் அவர் வாழ்க்கைத்துணைவியாரும் தூக்கிக்கொண்டு கால்நடையாக மகிழ்வுடன் வீட்டிற்குச் சென்ற காட்சி என் உள்ளத்தை உருக்கிவிட்டது. இத்தகைய பண்புடையவர்கள் இருப்பதை அறிந்துதான் திருவள்ளுவர் "பண்புடையார் பட்டுண்டுலகம்" என்று அருளிச் செய்தார் போலும்.

மேலும் இவர் சமாசச்சார்பில் 1. பிரதோஷ வழிபாடு 2. சிவராத்திரி வழிபாடு 3. சிவலிங்க வழிபாடு 4. முருக வழிபாடு முதலிய அருமையான நூல்களை ஆராய்ச்சி முறையில் எளிய நடையில் எழுதியிருப்பது போற்றத்தக்கது. இவைகள் பொருளீட்டும் நோக்குடன் எழுதப்பட வில்லை. சமய வளர்ச்சி கருதியே எழுதப்பெற்றன என்பதறிந்து சைவ மக்கள் எல்லோரும் வாங்கிபபடித்துப் பயன்பெறுவார்களாக!

வாழ்க முத்துசாமியார்! வளர்க சைவம்!
ஓங்குக சைவசித்தாந்த சமாசம்!

# SALE DEED EXTRACT

This deed of absolute sale executed this 29th day of February 1960 by K. Syamalamba......residing at Appa Rao Gardens, No. 64, Sydenham Road, Choolai, Madras, hereinafter called the Vendor...... **in favour of Saiva Siddhanta Maha Samajam**, a Society registered under the Societies Registration Act, **represented by its President, A. Somasundaram Chettiar** ...........hereinafter called the Purchaser........... witnesseth as follows :

...............Whereas by our agreement dated 17—10—1960 the Vendor agreed to sell and convey to the Purchaser, and the Purchaser agreed to purchase from the Vendor Bazaars and grounds bearing Municipal Door No. 2, 3 and 4 and situate in the Evening Bazaar Road, Park Town, Madras.........for sum of Rs. 18,750...........and whereas the Vendor received from the Purchaser a sum of Rs. 4,000 by cheque dated 14—1—1960 by way of advance and again on 3—2—1960.......Rs. 4,000 by way of further advance.........Now this Indentare witnesseth that in pursuance of the above agreement and **in consideration of the sum of Rs. 18,750, paid by the Purchaser to the Vendor** Rs. 4,000/- on 14—1—1960 and Rs 4,000/- on 3—2—1960 by way of cheques, and Rs. 10,750 paid by the Purchaser to the Vendor at the time of the Registration, the receipt of which sum of Rs. 18,750 in the manner aforesaid, **the Vendor doth hereby sell ......absolutely to the Purchaser** the said bazaars and grounds bearing Municipal Door Nos. 2, 3, 4, Evening

Bazaar Road, Park Town, Madras, more particularly described in the schedule hereto together with all the buildings......electric fittings......privileges easements ......to the Purchaser above mentioned absolutely and for ever free from any manner of claims there to ......................and the Vendor has this day put the Purchaser in possession of the said bazaars and grounds by delivering letters of attornment of tenancies from the tenants in occupation of the said bazaars and grounds to the Purchaser.......................................

In witness where of the Vendor above mentioned has set her hand and signed hereunder the day of the month and year first above written.

(Sd) Syamalamba.

**Note by the Secretary of the Samajam:** The Samajam purchased stamp papers valued Rs. 1,250 for the purchase of the property. The total amount paid by the Samajam thus comes to Rs. 20,000.

10–4–66 **(Sd) T. K. Narayana swami Naidu.**

# மதிப்புரை

அவிரோத வுந்தியார்-திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் உரையுடன். நூல் கிடைக்குமிடம்: தவத்திரு இராமசாமி யடிகள், தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திருமடம், பேரூர், கோவை மாவட்டம். விலை குறிக்கப் பெறவில்லை.

"நெஞ்சு ஊசல் நிகர் ஆட்டு ஒழிக்கும் உந்தி" என்பது புலவர் புராணம் தண்டபாணி சுவாமிகளின் அருள்வாக்கு.

100 பாடல்களுடனும் 536 உதாரணப் பாடல்களுடனும் இந்நூலு முரையும் சிறந்து விளங்குகின்றன. தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் இயற்றிய 4 நூல்களுள் இதுவுமொன்று. அந்நான்கு நூல்களுக்கும் திருப்போரூர் சிதம்பர சுவாமிகளே உரையெழுதியுள்ளார்கள். அவ் வுரைகளைச் சாந்தலிங்க சுவாமிகளே பார்த்து ஒப்பிமகிழ்ந்ததாகவும் தெரிகிறது. ஆகவே ஆசிரியர் கருத்துக்கேற்ப உரையும் அமைந்துள்ளது என்பது ஒருதலை. இந்நூல் நம்சமயக் கருத்துக்கள் பொதுளியுள்ள ஒரு சிறந்த பொக்கிஷமெனலாம். எளிமை, இனிமை செறிவு, அழுந்தியபற்றுள்ளம் கொள்ளச் செய்யும் சிறப்பியல்புமுதலிய பல பண்புகள் இந்நூலைப் படிப்போர்க்குத் தெற்றெனப் புலப்படும். ஆகவே அன்பர்கள் யாவரும் அவநெறிக்கட்படுத்தும் நூல்களைக் கண்ணாலும் பார்க்காது இது போன்ற தவஞானச்செல்வர்களின் அருட்பாடல்கள் நிறைந்த நூட்களை வாங்கிப் படித்துப் பயன்பெற்றுய்தி பெறுவார்களாக.

(அம்பை)

ஆன்மார்ப்பணத் துதி என்னும் மொழிபெயர்ப்பு நூல் ஒன்று வரப்பெற்றோம். இதன் ஆசிரியர் கவியரசு. கு. நடேசகவுண்டர் ஆவார். வடமொழியில் ஸ்ரீமத் அப்பைய தீக்ஷதர் அவர்கள் இப்பெரிய நூல் ஒன்றினை அருளி யிருக்கின்றார்கள். அப்பைய தீக்ஷிதர் அவர்கள் சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனியம்மானை யன்றி வேறு தெய்வங்களைத் தொழத் தகாது என்ற கருத்துடையார்கள். அவர்கள் உறைத்த பக்தியால் நிகழ்த்திய அற்புதங்கள் பல அவர்கள் வடமொழி நூலின் கருத்தைத் தமிழ்மக்கள் தெரிந்துய்வான் வேண்டி திரு. கவுண்டர் அவர்கள் மொழி பெயர்த்துப் பாக்களால் இயற்றியுள்ளார்கள் கவியரசின் கவிக்குக்குறை கூறுவார் உண்டோ? மிகச்சிறந்த நடையில் பக்தி நெறியில் அக்கவிகள் நம்மை ஈர்த்துச் செல்கின்றன. இந்நூல் தவத்திரு. சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகளின் ஐந்தாம் ஆண்டு குருபூசை நினைவு வெளியீடாக வெளிவந்துள்ளது. விலை குறிக்கப் பெறவில்லை. நூல் வேண்டுவோர் கு. நடேசக்கவுண்டர், 84, காந்திபுரம், 4-வது தெரு, கோயம்புத்தூர் என்ற முகவரிக்கு எழுதி விவரம் தெரிந்து கொள்ளலாம்.

(அம்பை)

திருவான்மியூர் ஸ்தல புராண வசனம் என்னும் நூலொன்று வரப்பெற்ருேம். இதனை வசனமாகச் சுருக்கி எழுதியவர் திரு.ரா. விசுவநாதய்யர் M. A. அவர்கள் ஆவர். வெளியீட்டாளர் ப. மகாதேவ அய்யர், அமரபாரதி, திருவான்மியூர் சென்னை-41.

இந்நூலில் தலபுராணம் கிடைப்பது அரிதானமையின் தலச்செய்தி தெரிந்து கொள்ள வேண்டிய சுருக்கம் அமைந்துள்ளது, திருவான்மியூர்த் தேவாரங்கள், திருவான்மியூர்ச் சிறப்புப்பற்றிய பலவற்றையும் தெரிந்து கொள்ளலாம். விலை ரூ. 0-50. தபாற்செலவு 0-15 காசுகள் தனியாகச் சேர்த்து வெளியீட்டாளருக்கு அனுப்பவேண்டும். திருவான்மியூர் சென்னையை அடுத்த சிறந்த பாடல் பெற்ற தலமாதலினுலும் அதனைத் திருப்பணிக் குழுவினர் செம்மைப் படுத்தப் பல ஆயத்தங்கள் மேற்கொண்டிருக்கின்றமையாலும் தக்க சமயத்து இந்நூல் வெளிவந்திருப்பது சிறந்ததே. அன்பர்கள் வாங்கிப் படித்துப் பல்லாற்ருனும் இத்தலம் சிறக்க ஆந்துணையும் உதவுவார்களாக.

(அம்பை)

திருத்தணிகை முருகப்பெருமான் புகழ்மாலை: ஆசிரியர் திரு. நா. ப. தணிகையரசு, இந்துமத பாடசாலை, வாலாஜாபாத்து, செங்கைமாவட்டம்.

இந்நூல் திருத்தணிகை வளர் முருகன் பெருமையைக் குறித்துக் கந்தரனுபூதியைப் போன்று அதே சந்தத்தில் முப்பது பாக்களைக் கொண்டது. சிறந்த கருத்துச் செறிவு, பக்தி ஊட்டும் தன்மை முதலிய நல்லியல்புகளைக் கொண்டது. அன்பர்கள் படித்துப் பயன் பெறுக. விலை குறிக்கப்பெறவில்லை.

(அம்பை)

1. காஞ்சி காமாட்சியம்மை திருப்பதிகம். 2 திம்மராசன்பேட்டை இராமலிங்கேசுவரர் திருக்குறுந்தொகை என்னும் இரு நூல்களும் வரப்பெற்ருேம். இவற்றின் ஆசிரியர் திரு. நா. ப. தணிகையரசு, (இந்துமத பாடசாலை, வாலாஜாபாத்து, செங்கைமாவட்டம்) ஆவர், இந்நூல்களில் ஆசிரியர் தேவார இசையமைப்பை ஒட்டி பக்தியூட்டத்தக்க பாடல்களைப் பாடியருளியுள்ளார். ஒவ்வொரு நூலிலும் பத்துப் பாக்களே உள. இவை பொருட் செறிவு, பக்திப்பரவசம் முதலிய நல்லியல்புகள் நிறைந்தவை. விலை குறிக்கப்பெறவில்லை. வேண்டுவோர் தபால்செலவு மாத்திரம் ஆசிரியருக்கு அனுப்பின் அவர்களுக்கு அந்நூல்களை அனுப்பிவைப்பார்.

(அம்பை)

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St , Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 13, East Mada St., Mylapore, Madras-4.